නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

05.08.2019 / 0830 – 1030

ක්‍රිස්තියානි ශිෂ්ටාචාරය I
கிறிஸ்தவ நாகரிகம் I
Christian Civilization I

49 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

- **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
- விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
- விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
- **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** பழங்கால மனிதர் ஒருவரோடொருவர் கூடிவாழும் முறையை அண்ணளவாக எக்காலத்தில் ஆரம்பித்தனர்?
(1) கி.மு. 3 000 ஆண்டுகள் (2) கி.மு. 5 000 ஆண்டுகள் (3) கி.மு. 8 000 ஆண்டுகள்
(4) கி.மு. 30 000 ஆண்டுகள் (5) கி.மு. 40 000 ஆண்டுகள்

**2.** இயேசு கிறிஸ்துவின் வாழ்வுடன் தொடர்புடைய மூன்று இடங்களை உள்ளடக்கிய தொகுதி யாது?
(1) யூதேயா, சுமேரியா, கலிலேயா (2) சுமேரியா, எருசலேம், கானா
(3) சமாரியா, மொசப்பத்தேமியா, யூதேயா (4) கலிலேயா, நாசரேத், எருசலேம்
(5) நாசரேத், பபிலோனியா, கானா

**3.** இஸ்ரேயல் மக்கள் எகிப்தில் அடிமைகளாக இருந்தபோது எகிப்தை ஆண்ட மன்னன் யார்?
(1) நபுகோதனசார் (2) 2 ஆம் இராம்சேசு (3) சரகோன்
(4) சைரஸ் (5) எப்பிபானுஸ்

**4.** 'வுல்கத்தா' இலத்தீன் மொழிபெயர்ப்பு பைபிளை வழிபாட்டிற்கு ஏற்றதாக அங்கீகரித்த பொதுச்சங்கம்
(1) நிசேயா பொதுச்சங்கம் (2) கல்சடோன் பொதுச்சங்கம் (3) எபேசு பொதுச்சங்கம்
(4) திரிதெந்து பொதுச்சங்கம் (5) முதலாம் வத்திக்கான் சங்கம்

**5.** பாலஸ்தீனாவின் தென்கரையோர பகுதியில் வாழ்ந்த மக்கள்
(1) பிலிஸ்தீயர் (2) பெனிசியர் (3) மக்கபேயர் (4) ஏதோமியர் (5) மோவாப்பியர்

**6.** பாலஸ்தீனாவின் மேற்கு மலைப்பகுதியில் **அமையாத** இடம்
(1) மேல் கலிலேயா (2) ஜெருசலேம் (3) சமாரியா
(4) ஹெப்ரோன் (5) கார்மேல் மலை

**7.** பின்வரும் கூற்றுக்களைக் கருதுக.
A - பசிலிக்கா இறைபீடம் நீள்சதுர வடிவில் அமைந்துள்ளது.
B - கொன்ஸ்தாந்திநோபிளில் விண்ணேற்ற ஆலயம் அமைந்துள்ளது.
C - பெத்தலகேமில் கிறிஸ்து பிறப்பு ஆலயம் அமைந்துள்ளது.
D - ஒலிவ மலையில் தூய ஆவியின் ஆலயம் அமைந்துள்ளது.
E - கல்வாரி மலையில் கல்லறை ஆலயம் அமைந்துள்ளது.
இவற்றுள் சரியான கூற்றுக்கள் யாவை?
(1) A, B, C (2) A, C, E (3) B, C, D (4) B, C, E (5) C, D, E

**8.** இஸ்ரேயலின் நீதித்தலைவர்களுக்கு வழங்கப்பட்ட பணி **அல்லாதது.**
(1) சமூகத்தில் ஒழுங்கினை நிலைநாட்டுதல்
(2) முரண்பாடுகளைத் தீர்த்தல்
(3) அந்நிய படையெடுப்புக்களிலிருந்து விடுவித்தல்
(4) உடன்படிக்கைக்கு பிரமாணிக்கமாய் இருக்க ஊக்கமளித்தல்
(5) எருசலேம் ஆலயத்திற்குச் சென்று பாஸ்கா விழாவினைக் கொண்டாட ஊக்கமளித்தல்

**9.** இஸ்ரேயல் மக்களை யாரிடமிருந்து விடுவித்தமை சிம்சோனின் பிரதான பங்களிப்பாகக் கொள்ளப்படுகிறது?
(1) எகிப்தியர் (2) ஏதோமியர் (3) பிலிஸ்தியர் (4) பெனிசியர் (5) அசிரியர்

**10.** இஸ்ரேயல் மன்னர் பற்றிய பின்வரும் கூற்றுக்களைக் கருதுக.
A - செங்கடலில் ஒரு துறைமுகத்தைக் கட்டியமை
B - ஞானத்துடன் செயற்படுவதற்கு இறை உதவியை வேண்டியமை
C - மரணம் வரைக்கும் யாவே இறைவனுக்குப் பிரமாணிக்கமாயிருந்தமை
D - எருசலேமில் ஓர் ஆலயத்தை நிறுவியமை
E - அண்டைய நாடுகளுடன் தொடர்ச்சியாகப் போரிட்டமை
இவற்றுள் சாலமோன் மன்னன் பற்றிய சரியான கூற்றுக்கள் எவை?
(1) A, B, C (2) A, B, D (3) A, C, D (4) B, C, D (5) B, C, E

**11.** எஸ்ரா, நெகேமியா சிறப்புற்றிருந்த காலம்,
(1) தாவீது மன்னனின் ஆட்சிக்காலம் (2) சாலமோன் மன்னனின் ஆட்சிக்காலம்
(3) அடிமை வாழ்வுக்காலம் (4) பாரசீகர்களின் ஆட்சிக்காலம்
(5) கிரேக்கர்களின் ஆட்சிக்காலம்

**12.** மன்னர் மகா அலெக்சாண்டருக்குப் பின்னர் பாலஸ்தீனத்தை ஆட்சி செய்த மன்னர் யார்?
(1) சைரஸ் (2) அந்தியோக்கஸ் எப்பிபானுஸ்
(3) தாலமி (4) பொம்பே
(5) செலுசீடஸ்

**13.** பெரிய ஏரோது மன்னர் ஆட்சியின் பின்னர் யூதாவை ஆண்ட அர்க்கெலா மன்னன் பதவிநீக்கம் செய்யப்பட்டமைக்கான காரணம்
(1) அவனது சுகயீனம்
(2) உரோமையர்களை எதிர்த்து கிரேக்கர்களுக்கு ஆதரவு வழங்கியமை
(3) அவனது கொடுங்கோல் ஆட்சி பற்றி யூதர்களால் உரோமைக்குப் புகார் செய்யப்பட்டமை
(4) எருசலேமில் அந்நிய தெய்வங்களை வழிபட்டமையோடு, மக்களையும் வழிபடத் தூண்டியமை
(5) திருமுழுக்கு யோவானுக்கு எதிராக செயற்பட்டமை

**14.** சதுசேயர்கள் தோற்றம்பெற்ற காலமாகக் கொள்ளப்படுவது
(1) தாவீது மன்னனின் காலம் (2) சாலமோன் மன்னனின் காலம்
(3) ஜெரோபோவாம் மன்னனின் காலம் (4) அடிமைத்தன வாழ்விற்குப் பிற்பட்டகாலம்
(5) கிரேக்கராட்சிக் காலம்

**15.** யாருக்கு எதிராகப் போரிடுவது 'செலட்ஸ்' எனப்படும் யூத தீவிரவாதிகளின் பிரதான நோக்கமாகக் காணப்பட்டது?
(1) உரோமையர்கள் (2) பரிசேயர்கள் (3) சமாரியர்கள்
(4) ஏரோதியர் அரச குடும்பம் (5) மறைநூல் அறிஞர்கள்

**16.** யூதர்கள் கூடாரத் திருவிழாவைக் கொண்டாடிய காலம் எது?
(1) மார்ச் - ஏப்ரல் (2) நவம்பர் - டிசம்பர் (3) செப்டம்பர் - ஒக்டோபர்
(4) ஏப்பிரலும், டிசம்பரும் (5) ஒக்ரோபரும், டிசம்பரும்

**17.** 'யோம் கிப்பூர்' என்பதன் பொருள்
(1) அறுவடை விழாவாகும். (2) பாவப் பரிகாரச் சடங்காகும்.
(3) ஆட்சிப் பொறுப்பேற்கும் விழாவாகும். (4) ஆலய அர்ப்பண விழாவாகும்.
(5) குழந்தையின் பிறப்பு விழாக் கொண்டாட்டமாகும்.

[பக். 3 ஐப் பார்க்க

**18.** யோவான் நற்செய்தியின்படி இயேசுவின் மரணத்திற்குப் பொறுப்பானவர்கள்
(1) உரோமையர்கள் (2) செலுட்ஸ் (3) பரிசேயர்கள்
(4) எசேனியர்கள் (5) யூதர்கள்

**19.** பின்வருவோருள் ஒரே குழுவில் உள்ளடக்கப்பட **முடியாதவர்கள்**
(1) பரிசேயர்கள் (2) சதுசேயர்கள் (3) மறைநூல் அறிஞர்கள்
(4) எசெனியர்கள் (5) ஆளுநர்கள்

**20.** எருசலேம் சங்கம் கூட்டப்பட்டமைக்கான முக்கிய காரணம்
(1) கிரேக்க மொழியில் வழிபாடு நிறைவேற்றப்பட்டமை
(2) ஓய்வு நாளில் நோன்பிருத்தல் பற்றித் தேடியாய்தல்
(3) யூதரல்லாத கிறிஸ்தவர்கள் யூத சட்டத்தைக் கடைப்பிடிக்குமாறு வற்புறுத்தப்பட்டமை
(4) இறந்தோரின் உயிர்ப்புக் குறித்து பலதரப்பட்ட கருத்துக்கள் நிலவியமை
(5) போலி இறைவாக்கினர் காணப்பட்டமை

**21.** கலாபனைகள் குறித்த பின்வரும் கூற்றுக்களைக் கருதுக.
A - திருச்சபை மேலும் பலமடைந்து வேகமாகப் பரவியது.
B - மரண பயம் காரணமாக பல கிறிஸ்தவர்கள் விசுவாசத்தைக் கைவிட்டனர்.
C - கிறிஸ்தவர்கள் உரோமைப் பேரரசினைக் கவிழ்ப்பதற்கு இரகசியமாகத் திட்டமிட்டனர்.
D - கிறிஸ்தவர்கள் தமது விசுவாசத்திற்குச் சாட்சியம் பகர சந்தர்ப்பம் கிடைத்தது.
E - திருச்சபைக்குள் விசுவாச வீரர்கள் உருவாகுவதற்கு வாய்ப்புக் கிடைத்தது.
இவற்றுள் உரோமைய கலாபனைகளின் காரணமாக ஏற்பட்ட விடயங்கள் யாவை?
(1) A, B, C (2) A, D, E (3) B, C, D (4) B, D, E (5) C, D, E

**22.** பின்வருவனவற்றுள் அலெக்சாந்திரிய சிந்தனைக்கூடம் பற்றிய சரியான கூற்று யாது?
(1) பசில் எனும் குரு இதனை ஆரம்பித்தார்.
(2) கி.பி. 5 ஆம் நூற்றாண்டில் ஆரம்பிக்கப்பட்டது.
(3) பிலோ என்பவர் இதன் தலைவராக விளங்கினார்.
(4) புனித அம்புரோசிரியர் இதன் மாணவராவார்.
(5) 'இயேசு கிறிஸ்துவின் தெய்வீகம்' அதிகளவில் வலியுறுத்தப்பட்டது.

**23.** பின்வருவனவற்றுள் அந்தியோக்கிய கல்விகூடம் பற்றிய சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) இங்கு இயேசு கிறிஸ்துவின் தெய்வீகம் வலியுறுத்தப்பட்டதோடு, ஆரிய பேதகப் படிப்பினை ஏற்றுக்கொள்ளப்பட்டது.
(2) இயேசு கிறிஸ்துவின் மனித இயல்பு வலியுறுத்தப்பட்டதோடு, பிளேற்றோவின் மெய்யியல் கொள்கை கடைப்பிடிக்கப்பட்டது.
(3) இயேசு கிறிஸ்துவின் மனித இயல்பு வலியுறுத்தப்பட்டதோடு, அரிஸ்டோட்டிலின் மெய்யியல் கொள்கை கடைப்பிடிக்கப்பட்டது.
(4) ஆரிய பேதகத்தின் படிப்பினை ஏற்றுக்கொள்ளப்பட்டதோடு, விவிலியப் பொருள் விளக்கத்தின்போது வார்த்தையின் பொருளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது.
(5) இயேசு கிறிஸ்துவின் தெய்வீகம் வலியுறுத்தப்பட்டதோடு, அரிஸ்டோட்டிலின் மெய்யியல் கொள்கை கடைப்பிடிக்கப்பட்டது.

**24.** திருச்சபையின் தந்தையர் பற்றிய பின்வரும் கூற்றுக்களைக் கருதுக.
A - இவர் அலெக்சாந்திரிய கல்விக்கூடத்துடன் தொடர்புடையவர்.
B - திருவிவிலியம் பற்றிய பல விளக்கவுரைகளை எழுதியுள்ளார்.
C - இவரது வாழ்வின் இறுதிப் பகுதியில் மனிக்கேயத்தைக் கடைப்பிடித்தார்.
D - புதிதாக கிறிஸ்தவத்தைத் தழுவியோருக்கு ஊக்கமளித்தார்.
E - இவர் புனித எரோணிமுவின் சீடராவார்.
இவற்றுள் ஒரிஜன் பற்றிய சரியான கூற்றுக்கள் எவை?
(1) A, B, C (2) A, B, D (3) A, C, E (4) B, C, E (5) C, D, E

**25.** ‘மரியா இறைவனின் தாய்’ எனப் பிரகடனப்படுத்திய பொதுச்சங்கம்

(1) நிசேயா பொதுச்சங்கம்
(2) கொன்ஸ்தாந்திநோபிள் பொதுச்சங்கம்
(3) கல்செடோன் பொதுச்சங்கம்
(4) எபேசுபொதுச்சங்கம்
(5) புளாரன்ஸ் பொதுச்சங்கம்

**26.** ஆரம்பகால ஆச்சிரம வாழ்வு பற்றிய சரியான கூற்றுக்களைக் கொண்ட சோடியைத் தெரிவுசெய்க.

(1) மறைசாட்சிய வாழ்வுக்கு மாற்றீடாக ஆச்சிரம வாழ்வு ஆரம்பிக்கப்பட்டது; துறவிகள் குழுக்களாக வாழ்ந்தனர்.
(2) ஆண், பெண் துறவிகள் ஆச்சிரம வாழ்வில் இணைந்து கொண்டனர்; புனித பசில் முதல் ஆச்சிரம துறவியாக கருதப்படுகின்றார்.
(3) துறவிகள் ஏகாந்தமாக வசித்ததுடன் செபத்திலும் தியானத்திலும் ஈடுபட்டனர்; துறவிகள் தாமாகவே ஏழ்மை வாழ்வை வாழ்ந்ததுடன் மணத்துறவையும் பாதுகாத்தனர்.
(4) துறவிகள் செபத்திற்காக மாத்திரம் ஒன்று கூடினர்; புனித சிரில் முதல் ஆச்சிரம துறவியாக கருதப்படுகின்றார்.
(5) துறவிகள் சிரியா, எகிப்து பாலைவனங்களிலும் காடுகளிலும் வாழ்ந்தனர்; ஆண் துறவிகள் மட்டும் ஆச்சிரம வாழ்வில் நுழைந்தனர்.

**27.** ஆச்சிரமத் துறவிகள் பற்றிய பின்வரும் கூற்றுக்களைக் கருதுக.

A - துறவிகள் ஏகாந்த வாழ்வு வாழவேண்டும் எனும் கருத்தைக் கொண்டவர்.
B - ‘ஐரோப்பிய மடத்துறவு வாழ்வின் தந்தை’ எனக் கொள்ளப்படுகிறார்.
C - மடத்துறவிகள் கிறிஸ்தவ வாழ்விற்கும் பக்திக்கும் மாதிரி எனக்கொண்டார்.
D - மடத்துறவிகளுக்கான ஒழுக்க விதிகளை எழுதினார்.
E - துறவிகளின் எண்ணிக்கை அதிகரித்தபோது அவர்களைக் குழுக்களாகப் பிரித்தார்.

இவற்றுள் புனித பசில் பற்றிய சரியான கூற்றுக்கள் எவை?

(1) A, B, C (2) A, B, D (3) A, D, E (4) B, C, E (5) E, D, E

**28.** பின்வருவனவற்றுள் புனித பெனடிக்ற் பற்றிய **பிழையான** கூற்று எது?

(1) இத்தாலியின் நூர்சியா என்னுமிடத்திலுள்ள பிரபுக் குடும்பத்தில் பிறந்தார்.
(2) துறவிகளுக்கான ஒழுங்கு நூலை எழுதினார்.
(3) இயற்றப்பட்ட ஒழுங்கு நூல், துறவியர் கிறிஸ்து மைய வாழ்வு வாழ உதவியது.
(4) மொன்தே கசினோ என்னுமிடத்தில் முதல் துறவு மடத்தை நிறுவினார்.
(5) அவரால் உருவாக்கப்பட்ட துறவறசபையின் விருதுவாக்கு ‘செபமும் கல்வியும்’ ஆகும்.

**29.** பின்வருவனவற்றுள் பழங்குடியினர் பற்றிய சரியான கூற்றினைத் தெரிவுசெய்க.

(1) ஓரளவு வளர்ச்சியடைந்த கல்வி முறையினைக் கொண்டிருந்தனர்.
(2) 5 ஆம், 6 ஆம் நூற்றாண்டுகளில் பழங்குடியினர் ஐரோப்பாவின் அனைத்துப் பகுதிகளிலும் வாழ்ந்தார்கள்
(3) கி. பி. 7 ஆம் நூற்றாண்டில் விஸ்கோஸ்தியர்கள் உரோமையைக் கைப்பற்றினர்.
(4) பெண்களை மிகக் குறைவான மதிப்புடையவர்களாகக் கருதினர்.
(5) உரோமானிய கட்டடக்கலை முறையை ஆரம்பித்தனர்.

**30.** பின்வருவனவற்றுள் இரவலர்கள் சபை பற்றிய சரியான கூற்று யாது?

(1) மத்திய காலத்தில் ஐரோப்பாவில் ஆன்மீக மறுமலர்ச்சியை ஏற்படுத்துவதற்காக நிறுவப்பட்டன.
(2) ஏற்கனவே நடைமுறையிலிருந்த ஆச்சிரம வாழ்க்கை முறையினை எதிர்த்தார்கள்.
(3) பிரான்சிஸ்கன் சபையே முதலில் நிறுவப்பட்ட இரவலர் சபையாகும்.
(4) அங்கத்தவர்கள் திருச்சபையின் தலைவர்களுக்கு எதிராகப் பேசியமையினால் இரவலர் சபைகள் தடைசெய்யப்பட்டன.
(5) புரட்டஸ்தாந்து சீர்திருத்த காலத்திலேயே இரவலர் சபைகள் நிறுவப்பட்டன.

**31.** பின்வருவனவற்றுள் புரட்டஸ்தாந்து மறுமலர்ச்சிற்கு வித்திட்ட காரணி **அல்லாதது** எது?
(1) திருச்சபைத் தலைவர்களின் உலகியல் போக்கிலான வாழக்கை முறை
(2) திருச்சபைக்கும் உரோமை பேரரசுக்கும் இடையேயான அதிகாரப் போராட்டம்
(3) திருச்சபைத் தலைவர்கள் அரசியல் செயற்பாடுகளில் ஈடுபட்டமையும் உலகியல் தலைவர்கள் திருச்சபையின் செயற்பாடுகளில் முறையற்ற விதத்தில் தலையிட்டமையும்
(4) திருச்சபை தனிநபர்களால் ஆட்சி செய்யப்படுவதைவிட ஆட்சி பன்முகப்படுத்தப்படல் மிகப் பொருத்தமானதென கருத்து ஏற்பட்டமை
(5) திருச்சபையின் தலைவர்களின் நடத்தை பற்றிய பொதுநிலையினரிடையே காணப்பட்ட அதிருப்தி

**32.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - புதிய நாடுகள் கண்டுபிடிக்கப்படல்
B - மறுமலர்ச்சியின் விளைவாக சமூகத்தின் கீழ் மட்டத்திலுள்ளவர்கள் உயர் மட்டத்திற்கு வருவதற்கான வாய்ப்புகள் காணப்பட்டமை
C - திருச்சபைக்குள் தோன்றிய புதிய தப்பறையான போதனைகள்
D - சமூகத்தில் நிலவிய புதிய சிந்தனைகள்
E - துறவற சபைகளுக்கிடையே காணப்பட்ட மோதல்கள்
இவற்றுள் புரட்டஸ்தாந்து சீர்திருத்தங்களுக்கு காரணமாய் அமைந்த அரசியல், சமூகப் பின்னணி பற்றிய சரியான கூற்றுகள் யாவை?
(1) A, B, C (2) A, B, D (3) B, C, D (4) B, D, E (5) C, D, E

**33.** பின்வருவனவற்றுள் உல்றிச் சுவிங்கிலியின் படிப்பினைகள் பற்றிய சரியான கூற்றுகளைத் தெரிவுசெய்க.
(1) விவிலியம் மட்டுமே உண்மையை அறிவதற்கான சரியான வழி; அருட்சாதனங்கள் அடையாளங்கள் மாத்திரமே.
(2) விவிலியம் மட்டுமே உண்மையை அறிவதற்கான சரியான வழி; நற்கருணையில் கிறிஸ்துவின் உண்மைப் பிரசன்னம் உண்டு.
(3) அருட்சாதனங்கள் அடையாளங்கள் மாத்திரமே; பிரபல்யமான பக்தி முயற்சிகளை ஊக்குவித்தார்.
(4) உத்தரிப்பு ஸ்தலம் ஏற்றுக்கொள்ளப்பட்டது; குருக்களின் பிரமச்சாரியம் வலியுறுத்தப்பட்டது.
(5) தவக்கால நோன்பை ஊக்குவித்தார்; குருக்களின் பிரமச்சாரியம் வலியுறுத்தப்பட்டது.

**34.** கப்புச்சியன் துறவற சபை பற்றிய **தவறான** கூற்றைத் தெரிவுசெய்க.
(1) பிரான்சிஸ்கன் துறவற சபையிலிருந்து விலகிய துறவியால் நிறுவப்பட்டது.
(2) தலையில் தொப்பியை அணிந்தமையால் அவர்கள் கப்புச்சியன் என்று அழைக்கப்பட்டனர்.
(3) புனித பிரான்சீஸ் அசிசியரால் ஆரம்பிக்கப்பட்டது.
(4) மிக எளிமையான வாழ்க்கை வாழ்ந்து சாதாரண மக்களுக்கு புரியும் விதத்தில் இறைவார்த்தையைப் போதித்தனர்.
(5) நற்செய்தி அறிவிக்கவும் கப்புச்சியன் துறவிகள் உலகமெங்கும் பரந்து சேவையாற்றவும் திருத்தந்தை 7 ஆம் கிளமெந்து அதிகாரபூர்வமாக அனுமதி அளித்தார்.

**35.** ஐரோப்பாவில் முதன்முதலில் பங்குப் பாடசாலைகளை அமைத்த துறவற சபையினர்
(1) பிரான்சிஸ்கன் சபையினர் (2) இயேசு சபையினர் (3) பெனடிக்ற் சபையினர்
(4) டொமினிக்கன் சபையினர் (5) அகுஸ்தீனார் சபையினர்

**36.** பின்வருவனவற்றுள் புனித தோமஸ் அக்குவினாஸ் பற்றிய சரியான கூற்று யாது?
(1) 13 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இறையியலாளராவார்.
(2) பிரான்சிஸ் அசிசியாரின் வாழ்க்கை முறையைக் கடைப்பிடித்தார்.
(3) திருச்சபை வரலாற்றியலில் பெரும் நிபுணராவார்.
(4) பொலஞ்ஞா பல்கலைக்கழக மாணவராவார்.
(5) 'இறைவனின் நகர்' என்னும் நூலை எழுதியவராவார்.

**37.** பின்வருவனவற்றுள் 'கிறிஸ்து வழி வாழ்வு' என்னும் நூல் பற்றிய சரியான கூற்று யாது?
(1) பின் மத்திய காலத்தில் எழுதப்பட்டது.
(2) புனித சிலுவை யோவானால் எழுதப்பட்டது.
(3) ஐரோப்பிய மொழிகளில் மட்டும் மொழிபெயர்ப்புச் செய்யப்பட்டது.
(4) ஒப்புரவு அருட்சாதனம் பற்றி விவரிக்கப்பட்டது.
(5) ஆன்மீக வாழ்வு தாழ்ந்த மட்டத்தில் காணப்பட்ட காலத்தில் எழுதப்பட்டது.

● பின்வரும் அட்டவணையில் A தொடக்கம் J வரை தரப்பட்டுள்ள தகவல்களை அடிப்படையாகக் கொண்டு **38, 39** ஆகிய வினாக்களுக்கு விடை தருக.

| | | | | |
|---|---|---|---|---|
| A<br>இறைவனின் நகர்<br>(City of God) | B<br>தெய்வீக ஓவியர்<br>(Divine Painter) | C<br>சும்மா<br>தியோலோஜியா | D<br>இத்தாலிய<br>மொழியின் தந்தை | E<br>சீர்பெற்ற வாழ்வு<br>(The Way of Perfection) |
| F<br>ஆன்மாவின்<br>கோட்டை | G<br>தன்னிலை ஏற்பு<br>(Confession) | H<br>மொனாலிசா | I<br>சும்மா கொன்திரா<br>ஜென்திலேஸ் | J<br>தெய்வீக நகைச்சுவை<br>நாடகம்<br>(Divine Comedy) |

**38.** புனித அவிலா தெரசாவுடன் தொடர்புடைய சோடி எது?
(1) A, H (2) C, J (3) D, H (4) E, F (5) E, J

**39.** டான்ரே அலிகியேரியுடன் தொடர்புடைய சோடி எது?
(1) A, J (2) B, I (3) C, G (4) D, F (5) D, J

**40.** 1960 இல் பாடசாலைகள் அரச மயமாக்கப்பட்டமையுடன் தொடர்புடைய பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - 40 உயர்நிலைக் கல்லூரிகள் அரசிடம் ஒப்படைக்கப்பட்டன.
B - பிள்ளைகளின் மறைக்கல்வி தொடர்பிலான பெற்றோரின் கரிசனை குறைவடைந்தது.
C - தேசிய மறைக்கல்வி நிலையம் நிறுவப்பட்டது.
மேற்குறித்த கூற்றுகளுள் சரியானது / சரியானவை
(1) A மாத்திரம் (2) A, B ஆகியன மாத்திரம் (3) A, C ஆகியன மாத்திரம்
(4) B, C ஆகியன மாத்திரம் (5) A, B, C ஆகிய யாவும்

**41.** இந்தியாவிலுள்ள திருச்சபைகளில் உரோமன் கத்தோலிக்க திருச்சபையினைச் சார்ந்த திருச்சபைகள் யாவை?
(1) சீரோ மலபார் திருச்சபை, இலத்தீன் திருச்சபை, தோமையார் கிறிஸ்தவர்கள்
(2) சிரிய கிறிஸ்தவர்கள், சீரோ மலங்கரா திருச்சபை, யாக்கோபித்த சிரிய திருச்சபை
(3) சீரோ மலங்கரா திருச்சபை, சீரோ மலபார் திருச்சபை, வைதீக சிரிய திருச்சபை
(4) மலங்கரா சிரிய வைதீக திருச்சபை, மார்தோமா திருச்சபை, இலத்தீன் திருச்சபை
(5) சீரோ மலபார் திருச்சபை, சீரோ மலங்கரா திருச்சபை, இலத்தீன் திருச்சபை

**42.** பிலிப்பைன்ஸ் நாட்டில் நற்செய்தியினை அறிவித்தவர்கள்
(1) பிரான்சியர்கள் (2) இத்தாலியர்கள் (3) வட அமெரிக்கர்கள்
(4) போர்த்துக்கேயர்கள் (5) ஸ்பானியர்கள்

**43.** போர்த்துக்கேயர் காலத்தில் இலங்கையில் மறைபரப்புப் பணிகளில் ஈடுபட்ட துறவற சபைகள் நான்கும் யாவை?
(1) பிரான்சிஸ்கன், ஆசிர்வாதப்பர், சொமஸ்கன், இயேசு சபையினர்
(2) பிரான்சிஸ்கன், இயேசு, டொமினிக்கன், அகுஸ்தீன் சபையினர்
(3) அமலமரித்தியாகிகள், டொமினிக்கன், கிளரேசியன், அகுஸ்தீன் சபையினர்
(4) அகுஸ்தீன், பிரான்சிஸ்கன், ஆசிர்வாதப்பர், சலேசியன் சபையினர்
(5) சலேசியன், இயேசு, பிரான்சிஸ்கன், டொமினிக்கன் சபையினர்

**44.** ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் இலங்கையில் காணப்பட்ட மூன்று வகையான பாடசாலைகளும் யாவை?
(1) மிஷன் பாடசாலைகள், செமினறிப் பாடசாலைகள், அரசாங்கப் பாடசாலைகள்
(2) அரசாங்கப் பாடசாலைகள், பிரிவெனாப் பாடசாலைகள், அனாதைப் பாடசாலைகள்
(3) செமினறிப் பாடசாலைகள், கோவில்பற்றுப் பாடசாலைகள், மிஷன் பாடசாலைகள்
(4) அரசாங்கப் பாடசாலைகள், மிஷன் பாடசாலைகள், பிரிவெனாப் பாடசாலைகள்
(5) அரசாங்கப் பாடசாலைகள், செமினரிப் பாடசாலைகள், பிரிவெனாப் பாடசாலைகள்

**45.** இலங்கையின் கத்தோலிக்க ஆயர் பேரவையின் கீழ் இயங்குகின்ற சமூகப்பணி நிறுவனம் எது?
(1) கரித்தாஸ் இலங்கை செடேக் (SEDEC)
(2) கிறிஸ்தவ இளைஞர் கழகம்
(3) கிறிஸ்தவ மகளிர் கழகம்
(4) கிறீன் மருத்துவமனை
(5) றோட்டரிக் கழகம்

**46.** சமூக நீதிக்காக குரல் கொடுத்த அங்கிலிக்கன் திருச்சபைத் தலைவர் யார்?
(1) ஆயர் லீயோ நாணயக்கார
(2) ஆயர் லக்ஷ்மன் விக்கிரமசிங்க
(3) அருட்திரு மைக்கல் றொட்றிக்கோ
(4) அருட்திரு மேரி பஸ்தியான்
(5) அருட்திரு எச். எஸ். தாவீது

**47.** சுற்றுச்சூழல் பாதுகாப்பினை வலியுறுத்தி எழுதப்பட்ட சுற்று மடலைத் தெரிவுசெய்க.
(1) அவனியில் அமைதி - Pacem in Terris
(2) மனிதரின் மீட்பர் - Redemptor Hominis
(3) திருச்சபையின் சமூக ஈடுபாடு - Solicitudo Rei Socialis
(4) இறைவனுக்கே புகழ் - Laudato Si
(5) மக்களின் முன்னேற்றம் - Populorum Progressio

**48.** திருச்சபைகள் பற்றிய பின்வரும் கூற்றுக்களைக் கருதுக.
A - 1947 ஆம் ஆண்டில் பம்பாயில் ஆரம்பிக்கப்பட்டது.
B - 1957 ஆம் ஆண்டில் இந்தோனேசியாவில் ஆரம்பிக்கப்பட்டது.
C - கிட்டத்தட்ட 100 பிளவுற்ற திருச்சபைகளின் ஒருங்கிணைக்கப்பட்ட அமைப்பாகும்.
D - இலங்கை இவ்வமைப்பின் உறுப்புரிமை நாடாகும்.
E - ஆசியாவில் கிறிஸ்தவத்தைப் பரப்புதல் இவ்வமைப்பின் நோக்கமாகும்.
இவற்றுள் ஆசிய கிறிஸ்தவ சபைகளின் சம்மேளனம் (ACC) பற்றிய கூற்றுக்கள் யாவை?
(1) A, B, C (2) A, B, D (3) B, C, D (4) B, D, E (5) C, D, E

**49.** 'தொழிலாளரின் நிலைமை' எனும் சுற்றுமடலை எழுதிய திருத்தந்தை யார்?
(1) XIII ஆம் லீயோ
(2) XXIII ஆம் யோவான்
(3) VI ஆம் பவுல்
(4) II ஆம் யோன் பவுல்
(5) XVI ஆம் பெனடிக்ற்

**50.** பின்வருவனவற்றுள் பல்சமய உறவு பற்றிக் குறிப்பிடும் 2 ஆம் வத்திக்கான் சங்க மடல்களின் தொகுப்பைத் தெரிவுசெய்க.
(1) திருச்சபை, திருவழிபாடு, திருச்சபையின் நற்செய்திப்பணி, இன்றைய உலகில் திருச்சபை
(2) திருச்சபை, சமூகத் தொடர்பு கருவிகள், கிறிஸ்தவமல்லா மறைகளோடு திருச்சபைக்குள்ள உறவு, இன்றைய உலகில் திருச்சபை
(3) திருச்சபை, சமயக் கல்வி, கிறிஸ்தவமல்லா மறைகளோடு திருச்சபைக்குள்ள உறவு, திருச்சபையின் நற்செய்திப் பணி
(4) திருச்சபை, இறைவெளிப்பாடு, இன்றைய உலகில் திருச்சபை, கிறிஸ்தவ ஒன்றிப்பு
(5) திருச்சபை, இன்றைய உலகில் திருச்சபை, திருச்சபையின் நற்செய்திப் பணி, கிறிஸ்தவமல்லா மறைகளோடு திருச்சபைக்குள்ள உறவு

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2019

## නව නිර්දේශය/ புதிய பாடத்திட்டம

| විෂය අංකය<br>பாட இலக்கம் | 49 | විෂයය<br>பாடம் | கிறிஸ்தவ நாகரிகம் |
|---|---|---|---|

## ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

### I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 01. | 5 | 11. | 4 | 21. | 2 | 31. | 4 | 41. | 5 |
| 02. | 4 | 12. | 3 | 22. | 5 | 32. | 2 | 42. | 5 |
| 03. | 2 | 13. | 3 | 23. | 3 | 33. | 1 | 43. | 2 |
| 04. | 4 | 14. | 5 | 24. | 2 | 34. | 3 | 44. | 4 |
| 05. | 4 | 15. | 1 | 25. | 4 | 35. | 3 | 45. | 1 |
| 06. | 5 | 16. | 3 | 26. | 3 | 36. | 1 | 46. | 2 |
| 07. | 2 | 17. | 2 | 27. | ALL | 37. | 5 | 47. | 4 |
| 08. | 5 | 18. | 5 | 28. | 5 | 38. | 4 | 48. | 3 |
| 09. | 3 | 19. | 5 | 29. | 2 | 39. | 5 | 49. | 1 |
| 10. | 2 | 20. | 3 | 30. | 1 | 40. | 3 | 50. | 5 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 02 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 2 × 50 = 100

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ක්‍රිස්තියානි ශිෂ්ටාචාරය II
கிறிஸ்தவ நாகரிகம் II
Christian Civilization II

49 T II

06.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி **I** இலிருந்து **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** (i) புறவினத்தார் குறித்து நற்செய்தியில் காணப்படும் குறிப்புகள் **நான்கு** தருக.

(ii) சீடத்துவம் பற்றிய கிறிஸ்துவின் படிப்பினைகள் **நான்கினைத்** தருக.

(iii) மலைப்பொழிவில் காணப்படும் இறையரசின் மதிப்பீடுகள் **நான்கைக்** குறிப்பிடுக.

(iv) இறையரசின் தன்மையை விளக்கும் உவமைகள் **நான்கினைத்** தருக.

(v) நற்செய்திகளின்படி இயேசுவின் சிலுவை மரணம் பற்றிய விபரக்குறிப்புகள் **நான்கு** எழுதுக.

(4 × 5 = 20 புள்ளிகள்)

**2.** (i) **நான்கு** தப்பறையான போதனைகளையும் அவற்றின் முக்கிய படிப்பினைகளையும் குறிப்பிடுக.

(ii) சிலுவைப் போரின் சாதக, பாதக விளைவுகள் **இரண்டு** வீதம் எழுதுக.

(iii) ஆரம்பகால கிறிஸ்தவச் சிந்தனையாளர்களின் மறைக் கோட்பாட்டு, ஆன்மீக வளர்ச்சிக்கான பங்களிப்புகள் **நான்கு** தருக.

(iv) புனித அகுஸ்தீனாரின் வாழ்க்கை, படிப்பினை பற்றிய விடயங்கள் **நான்கு** தருக.

(v) அலெக்சாந்திரிய சிந்தனைக்கூடம் பற்றிய விடயங்கள் **நான்கு** தருக.

(4 × 5 = 20 புள்ளிகள்)

**3.** (i) இந்தியாவிலுள்ள இலத்தீன் திருச்சபையின் பண்புகள் **நான்கு** எழுதுக.

(ii) மார்தோமா திருச்சபையின் தோற்றம் பற்றிய விடயங்கள் **நான்கு** தருக.

(iii) ஜப்பானில் திருச்சபை ஆரம்பத்தின்போது இயேசு சபையினர் ஆற்றிய பங்களிப்புகள் **நான்கு** எழுதுக.

(iv) போர்த்துக்கேயரின் வருகைக்கு முன்னரே இலங்கையில் கிறிஸ்தவம் காணப்பட்டதற்கான **நான்கு** சான்றுகளை முன்வைக்குக.

(v) இலங்கையின் கல்வி முன்னேற்றத்துக்காக ஆயர் பொஞ்சின் ஆற்றிய பணிகள் **நான்கு** தருக.

(4 × 5 = 20 புள்ளிகள்)

## பகுதி II

4. (i) தூய பவுலின் திருமடல்களில் காணப்படும் 'இறையருள்' பற்றிய படிப்பினைகளை உள்ளடக்கிய சுருக்கமான கட்டுரையொன்று எழுதுக.

(ii) இறையருளால் நிரப்பப்பட்ட கிறிஸ்தவர்கள் எவ்வாறு கடவுளின் படைப்பாகிய சூழலைப் பொறுப்புணர்ச்சியுடன் பாதுகாக்கலாமென விளக்குக.

(10 × 2 = 20 புள்ளிகள்)

5. (i) கி. பி. 1054 இல் திருச்சபை மேற்கு, கிழக்கு என இரண்டாக பிரிந்தது. இவ்வாறு பிரிந்தமைக்கு வழிகோலிய தலைமைத்துவ, மறைக்கோட்பாட்டுக் காரணிகளை விவரிக்குக.

(ii) திருச்சபை, உலகில் இறையரசின் அடையாளமாக விளங்குவதற்கு கிறிஸ்தவ ஒன்றிப்பின் தேவை பற்றி விளக்குக.

(10 × 2 = 20 புள்ளிகள்)

6. (i) கதீற்றல் பாடசாலைக் கல்வி, ஐரோப்பிய சமூகத்திற்கு வழங்கிய முற்போக்கான பங்களிப்புகளை மதிப்பிடுக.

(ii) ஒரு நாட்டின் பல்துறைசார் மேம்பாட்டிற்கு பாடசாலைக் கல்வி பங்களிப்புச் செய்யத்தக்க வழிவகைகள் பற்றி விளக்குக.

(10 × 2 = 20 புள்ளிகள்)

7. (i) இலங்கையில் போர்த்துக்கேயர் ஆட்சிக் காலத்தில் கத்தோலிக்க சமய வளர்ச்சிக்கு ஓவியம், இலக்கியம், கட்டடக்கலை, அரங்கியற்கலை ஆகியவை பயன்படுத்தப்பட்ட விதத்தை ஆராய்க.

(ii) கிறிஸ்தவ மதிப்பீடுகளை முன்னேற்றுவதற்கு ஓவியம், இலக்கியம், கட்டடக்கலை, அரங்கியற் கலை, சமூக வலைத்தளங்கள் போன்றவற்றை நடைமுறைச் சமூகத்தில் பயன்படுத்தத்தக்க விதத்தை விவரிக்குக.

(10 × 2 = 20 புள்ளிகள்)

8. (i) திருமணம், குடும்பம் ஆகியன பற்றி 2 ஆம் வத்திக்கான் சங்கத்தின் 'இன்றைய உலகில் திருச்சபை' என்னும் ஏட்டில் குறிப்பிடப்பட்டுள்ள படிப்பினைகளை விளக்குக.

(ii) கிறிஸ்தவ குடும்பங்களில் அதிகரித்து வரும் குழப்பகரமான சூழ்நிலைகளில் மகிழ்ச்சிகரமானதும் ஆரோக்கியமானதுமான குடும்ப வாழ்வினைக் கட்டியெழுப்புவதில் பிள்ளைகளின் வகிபாகம் பற்றி விளக்குக.

(10 × 2 = 20 புள்ளிகள்)

* * *

# கிறிஸ்தவ நாகரிகம்
# பகுதி II
# அமைப்புக் கட்டுரை I

01. **கிறிஸ்தவ நாகரிகத்தில் செல்வாக்குச் செலுத்திய யூத, கிரேக்க, உரோமைய நாகரிகங்களின் கலாசார கூறுகளையும், குறிப்பாக கிரேக்க, இலத்தீன் மொழியின் சிறப்பினையும் பயன்பாடுகளையும் பற்றிய மாணவர்களின் அறிவைப் பரீட்சித்தல்.**

i. **புறவினத்தார் குறித்து நற்செய்தியில் காணப்படும் குறிப்புக்கள் நான்கு தருக.**

- இயேசுவின் பிறப்பின்போது அவரைத் தரிசிக்க வந்த கீழ்திசை ஞானிகள் (மத். 2: 1-12)
- எருசலேம் ஆலயத்தில் சிமியோன் குழந்தையைக் கையிலேந்தி உரைத்த 'இம்மீட்பே பிற இனத்தாருக்கு வெளிப்பாடு அருளும் ஒளி' எனும் வார்த்தைகள் (லூக். 2: 25-35)
- இயேசுவுக்கும் சமாரியஉகளுக்கும் இடையிலான தொடர்புகள்.
  சமாரியப் பெண்ணுடான உரையாடல் (யோவா. 4: 1-42).
  பத்துத் தொழுநோயாளர்கள் குணம்பெறல் (லூக். 17: 11-19)
  நல்ல சமாரித்தன் உவமை (லூக். 10: 25-37)
- பொல்லாத நடுவனும், கைம்பெண்ணும் உவமை (லூக். 18: 1-8)
- கானானியப் பெண்ணின் நம்பிக்கை (மத். 15: 21-28)
- அரச அலுவலர் மகன் குணமாதல் (யோவா. 4: 46-54).
- நற்செய்திக் கட்டளை - 'உலகெங்கும் சென்று படைப்பிற்கெல்லாம் நற்செய்தியினை அறிவியுங்கள்' (மாற். 16:15).

ii. **சீடத்துவம் பற்றிய கிறிஸ்துவின் படிப்பினைகள் நான்கினைத் தருக.**

- சமூகத்திலுள்ள தலைவர்களைப் போன்று சீடர்கள் பதவி, பெருமைகளைத் தேடக்கூடாது.
- இயேசுவைப் பின்பற்ற விரும்புகின்றவர்கள் தன்னலம் துறந்து தமது சிலுவையினைச் சுமந்துகொண்டு அவரைப் பின்தொடர வேண்டும்.
- சமூகத்தில் முதலிடம் பெற விரும்புகின்றவர்கள் சமூகத்தில் கடையனாக மாற வேண்டும்.
- சமூதாயத்தில் சிறியவர்களாக எண்ணப்பட்டு, உதறித் தள்ளப்பட்டவர்களுடன் அவர்கள் ஒருவராக மாற வேண்டும்.
- மானிட மகன் தொண்டு ஏற்பதற்கு அல்ல தொண்டு ஆற்றுவதற்கும் பலருடைய மீட்புக்கு ஈடாக தம் உயிரை கொடுப்பதற்கும் வந்தார் என்பதனை மனதில் கொள்ளல் வேண்டும்.
- நாம் கிறிஸ்துவால் தெரிந்து கொள்ளப்பட்டவர்கள். நாம் அவரைத் தெரியவில்லை மாறாக அவரே நம்மைத் தேர்ந்து கொண்டார்.

**iii. மலைப்பொழிவில் காணப்படும் இறையரசின் மதிப்பீடுகள் நான்கைக் குறிப்பிடுக.**

- ஏழையரின் உள்ளத்தோராய், கனிவுடையோராய், நீதியும், நேர்மைத்தன்மையும் கொண்டோராய், இரக்கமுடையோராய், தூய உள்ளத்தவராய் வாழ்தல் வேண்டும்.
- இறையரசின் சாட்சிகள் மண்ணுலகில் உப்பாகவும், ஒளியாகவும் திகழ வேண்டும்.
- அடுத்தவர்களுடன் கொள்ளும் உறவில் சினங்கொள்ளுதல், விபசாரம், ஆணையிடுதல், பழிவாங்குதல் போன்ற செயல்களைத் தவிர்த்து பகைவரிடம் அன்பு கொள்வதனை வாழ்வாகக் கொள்ளல் வேண்டும்.
- செபவாழ்வில் நிலைத்திருப்பவர்களாக இருக்க வேண்டும்.

**iv. இறையரசின் தன்மையை விளக்கும் உவமைகள் நான்கைத் தருக.**

- கடுகு விதை (மத். 13: 31-32)
- புளிப்பு மாவு (மத். 13: 33)
- புதையல் (மத். 13: 44)
- முத்து (மத். 13: 45-46)
- வலை (மத். 13: 47-48)

**v. நற்செய்தியின்படி இயேசுவின் சிலுவை மரணம் பற்றிய விபரக்குறிப்புகள் நான்கு எழுதுக.**

- இயேசு அறையப்பட்ட சிலுவையில் 'நசரேத்தூர் இயேசு யூதர்களின் அரசன்' எனும் அறிக்கையை தொங்க விடும்படி பிலாத்துவால் உத்தரவிடப்பட்டது.
- அவ்வறிக்கை எபிரேயம், கிரேக்கம், இலத்தீன் மொழிகளில் எழுதப்பட்டிருந்தது.
- இயேசுவைச் சிலுவையில் அறைந்த பிற்பாடு அவருடைய மேலுடைகளை நான்கு பாகங்களாகப் பிரித்து படைவீரர்கள் எடுத்துக் கொண்டார்கள்.
- இயேசு அறையப்பட்ட சிலுவைக்கருகில் அவரின் தாயும், சில பெண்களும், அவரின் அன்புச் சீடரும் நின்றார்கள்.
- இயேசு சிலுவையில் 'தாகமாயிருக்கிறது' என்று கூறியபோது அவருக்கு புளித்த திராட்சை இரசத்தை குடிக்கக் கொடுத்தார்கள்.
- இயேசு அதனைச் சுவைத்த பிற்பாடு 'எல்லாம் நிறைவேறிற்று' என்று தனது பணியினை நிறைவு செய்வதாகக்கூறி 'தலைசாய்த்து ஆவியை ஒப்படைத்தார்'
- இறந்த இயேசுவின் உடலை படைவீரன் ஒருவன் ஈட்டியால் குத்தினான். அப்போது இரத்தமும், தண்ணீரும் வெளிவந்தன. இங்கு இரத்தம் வாழ்வையும், தண்ணீர் தூய்மைப்படுத்தும் இறையருளையும், தூய ஆவியில் வாழ்வினையும் குறிக்கின்றன.
- இறந்த இயேசுவின் உடலை அரிமத்தியாவூர் யோசேப், நிக்கதேமுடன் இணைந்து யூதச்சடங்கு முறைப்படி அடக்கம் செய்தார்.

**02. மிலான் சாசனத்தின் உறுப்புரைகள், மனிக்கேயப் பேதகப் படிப்பினைகள், மத்திய காலத்திருச்சபையின் ஆன்மீக சீரழிவுக்கு ஏதுவான காரணிகள், கார்மேல் துறவற சபையைச் சீர்செய்யும் நோக்கில் செயற்பட்ட புனித சிலுவை யோவானால் எழுதப்பட்ட நூல்கள், ஐரோப்பாவில் கிறிஸ்தவம் பரவிய வழிமுறைகள் தொடர்பான அறிவைப் பரீட்சித்தல்.**

**i. நான்கு தப்பறையான போதனைகளையும் அவற்றின் முக்கிய படிப்பினைகளையும் குறிப்பிடுக.**

- ஆரிய பேதகம்
  வார்த்தை கடவுளிலும் கீழானவர்
  மகன் தந்தைக்கு சமமானவர் அல்லர்
  ஒரே பொருளானவர் அல்லர்
  நித்தியமானவர் அல்லர்

- நெஸ்தோரிய பேதகம்
  இயேசுவில் இரண்டு ஆள் தன்மையுண்டு
  மனித ஆள், கடவுள் அல்ல
  மனித இயேசுவைப் பெற்றெடுத்த மரியாவை தேவதாய் எனக்கூற முடியாது

- இயுத்திக்கேய பேதகம்
  இயேசுவில் ஒரு ஆள் தன்மை மட்டுமே உண்டு
  இயேசுவில் ஒரு சுபாபம் மட்டுமே உண்டு
  அவரது மனித சுபாபம் இறைசுபாபத்தில் மறைந்துவிட்டது

- மசிதோனிய பேதகம்
  தூய ஆவி கடவுள் அல்ல
  இயேசுவும் கடவுள் அல்ல

**ii. சிலுவைப் போரின் சாதக, பாதக விளைவுகள் இரண்டு வீதம் எழுதுக.**

**சாதகம்**

- மக்களிடையே மீட்பு எண்ணம் புத்துயிர் பெற்றது.
- இஸ்லாமியரின் வலிமை குறைவடைந்தது.
- புனித நாட்டிற்கான திருப்பயணம் மேற்கொள்ள வாய்ப்புக் கிட்டியது.
- தனிச்சண்டைகள் ஒழிந்தன.
- அடிமை வியாபாரம் ஒழிந்தது.
- கருணை வீரர் சபை, சிறை மீட்பு சபை, படைத்துறவியர் சபைகள் உருவாகின.
- திருச்சபையின் ஒற்றுமைக்கு உரோமையே மெய்யான மூலகாரணி என்பது உறுதிப்படுத்தப்பட்டது.

**பாதகம்**

- கீழைநாட்டுக் கிறிஸ்தவர்கள் ஆதரவற்றவர்களாயினர்.
- புனித பூமிக்கு திருப்பயணம் செய்யும் பயணத்தடையை நீக்கும் எண்ணம் நிறைவேறவில்லை.
- சிலுவைப்போரில் ஈடுபட்ட போர்வீரர்களின் போக்குகளால் திருச்சபையின் - உத்தம தன்மைக்கு களங்கம் ஏற்பட்டது.
- சிலுவைப் போரிற்கு ஆதரவு வழங்கிய அரசர்கள் திருச்சபையை தமது ஆதிக்கத்தில் வைத்திருக்க முற்பட்டனர்.
- தப்பறைக் கொள்கைகள் மற்றும் கடவுள் மறுப்புக் கொள்கைகள் தோற்றம் பெற்றன.

iii. **ஆரம்பகால கிறிஸ்தவச் சிந்தனையாளர்களின் மறைக் கோட்பாடு, ஆன்மீக வளர்ச்சிக்கான பங்களிப்புக்கள் நான்கு தருக.**

- ஆரம்பகால கிறிஸ்தவ சிந்தனையாளர்கள் கிறிஸ்தவர்களுக்கு எதிராக மேற்கொள்ளப்பட்ட கலாபனைகள் மற்றும் தப்பறையான போதனைகளின்போது கிறிஸ்தவ விசுவாசத்தைப் பாதுகாக்கும் பொருட்டு பல நூல்களை எழுதி விசுவாசத்தை உறுதிப்படுத்தினர்.
- உரோமையரின் பல தெய்வக் கொள்கைகளுக்கு எதிராக பல நூல்களை எழுதி உண்மை இறைவனை தெளிவுபடுத்தி நின்றனர்.
- பொதுச்சங்கங்களைக் கூட்டி தப்பறைக்கெதிரான சத்தியங்களைத் தெளிவுபடுத்தி ஆன்மீகத்தில் ஊக்கப்படுத்தினர்.
- திருவிவிலியத்தை மொழிபெயர்ப்பு செய்து அதன் மூலம் ஆன்மீக வழிகாட்டல்களை மேற்கொண்டனர்.
- அருட்சாதனங்கள் தொடர்பாக முழுமையான விளக்கமளித்து ஆன்மீக ஊட்டம் பெற வழிவகுத்தனர்.
- கலாபனைகளின்போது கிறிஸ்தவர்களை சந்தித்து அவர்களைத் திடப்படுத்தியதுடன் பல காப்புரை நூல்களை எழுதினர்.
- தமது உயிரை துச்சமென மதித்து உயிர்த்தியாகம் செய்தனர்.
- அலெக்ஸ்சாந்திரியா, அந்தியோக்கியா போன்ற இடங்களில் கல்விக்கூடங்களை அமைத்து ஆன்மீகம் சார்ந்த இறையியல் கோட்பாடுகளை முன்வைத்தனர்.

iv. **புனித அகுஸ்தீனாரின் வாழ்க்கை, படிப்பினை பற்றிய விடயங்கள் நான்கு தருக.**

**புனித அகுஸ்தீனாரின் வாழ்க்கை**

- வட ஆபிரிக்காவில் தகாஸ்தே என்னும் இடத்தில் கி.பி. 354இல் பிறந்தார்.
- ஆபிரிக்காவில் கார்த்தேஜ் பல்கலைக்கழகத்தில் சட்டக்கல்வி பயின்றார்.
- சிசரோவின் ஹொரேன்சியுஸ் என்ற நூலைக்கற்று உண்மை ஞானத்தை அடைய முயற்சித்தார்.
- மனிக்கேய பேதகத்தின் கருத்துக்களில் நாட்டம் உடையவராயிருந்து பின்னர் மனமாற்றம் பெற்றார்.
- மிலான் நகர ஆயரான புனித அம்ரோசியார் மூலம் திருமறையின் கோட்பாடுகளை அறிந்து மனமாற்றம் பெற்றார்.
- பிளேற்றோவின் மெய்யியல் சிந்தனைகளின்படி பல நூல்களை எழுதினார்.

- மனிக்கேயம், பெலாஜியம், தொனாத்திய தப்பறைகளுக்கு எதிராக பல விசுவாச உண்மைகளை முன்வைத்தார்.
- இலத்தீன் திருச்சபைத் தந்தையருள் சிறப்புப் பெற்றவர்.
- திருச்சபையின் இறையியல் மறைவல்லுனஉ எனவும் போற்றப்படுகிறார்.

**புனித அகுஸ்தீனாரின் படிப்பினைகள்**

- புனித அகுஸ்தீனார் 113 நூல்கள், 500 மறையுரைகள், 218 திருமுகங்கள் எழுதியுள்ளார்.
- இவற்றுள் சிறப்புப்பெற்ற ஆக்கங்களாக, வாழ்க்கை அறிக்கைஃதன்னிலை ஏற்பு, இறைவனின் நகரம், மூவொரு இறைவன் ஆகியவற்றைக் கருதலாம்.
- வாழ்க்கை அறிக்கை எனும் நூலில் தமது முன்னைய பாவநிலையிலிருந்து விடுதலை பெற்றமைக்கு நன்றி தெரிவிக்கின்றார்.
- இறைவனின் நகரம் எனும் நூலில் இறையருளின் தன்மையும், அதனைத் தேடி அன்பையும், மன்னிப்பையும் அடிப்படையாகக் கொண்ட சமூகமாக வாழும் தன்மையை கட்டி எழுப்ப வேண்டியதன் அவசியம் வலியுறுத்தப்படுகின்றது.
- மூவொரு இறைவன் எனும் நூலில் தப்பறைகளுக்கு எதிரான விளக்கமும், இறைவன், இறைத்தன்மை, இறைவல்லமை, இறை ஆள்தன்மை என்பவைகள் படிப்பினைகளாக அமைந்துள்ளன.

**V. அலெக்சாந்திரிய சிந்தனைக்கூடம் பற்றிய விடயங்கள் நான்கு தருக.**

- 2ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் அலெக்ஸ்சாந்திரியாவில் அமைக்கப்பட்டது.
- பன்ரைனஸ், அலெக்ஸ்சாந்திரிய கிளமெண்ட், ஒறிஜன் ஆகியோர் இக்கல்விக் கூடத்தின் சிந்தனையாளர்களாவர்.
- இதன் முதல் அதிபர் பன்ரைனஸ் ஆவார், எனினும் திருச்சபையால் நியமனம் பெற்ற முதல் அதிபர் ஒரிஜின் ஆவார்.
- கிறிஸ்தியலை விளக்க பிளேட்டோவின் மெய்யியல் சிந்தனைகளைப் பயன்படுத்தினர்.
- திருவிவிலியத்தை விளக்க உருவக முறை பயன்படுத்தப்பட்டது.
- இறைவெளிப்பாட்டு உண்மைகளை உத்தேசக் கொள்கைகளைப் பயன்படுத்தி ஆய்வு செய்தனர்.
- கிறிஸ்துவின் இறையியல்பு வலியுறுத்தப்பட்டு மனித அவதாரம் எடுத்த கடவுள் என்பதை முக்கியப்படுத்தினர்.
- ஆரிய பேதகத்திற்கு எதிரான கருத்துக்கள் முன்வைக்கப்பட்டன.
- யோவான் நற்செய்தியை அதிகம் மேற்கோள்காட்டி கிறிஸ்துவின் இறையியல்புக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது,

**03. இலங்கைக்கு வருகை தந்த மறைப்பரப்பாளர்களான பிரான்சிஸ்கன் சபை, இயேசு சபையினரின் கல்விச் செயற்பாடுகளின் நிறைகளையும், குறைகளையும், ஒல்லாந்த காலத்து அனாதைப் பாடசாலைகளின் செயற்பாடுகள், ஆங்கிலேயர் ஆட்சியின் போது இலங்கைக்கு வருகை தந்த ஆங்கில நாட்டு பிசனரிமார் பற்றிய மாணவர்களின் அறிவை மதிப்பீடல்.**

**i. இந்தியாவிலுள்ள இலத்தீன் திருச்சபையின் பண்புகள் நான்கு எழுதுக.**

- இலத்தீன் திருச்சபையின் அமைப்பு முறை பங்காகும். பங்கின் தலைவராக, ஆன்மீக வழிகாட்டியாக பங்குத்தந்தை செயற்படுதல்.
- பல பங்குகள் ஒன்றிணைந்து மறைமாவட்டம் உருவாகுதல், அதன் தலைவராக ஆயர் செயற்படுதல்
- அத்திருச்சபையின் வழிபாட்டு முறை மேலைத்தேய மரபு முறைகளைச் சார்ந்தமை.
- இங்கு வழிபாடுகளுக்கும், பக்தி முயற்சிகளுக்கும், கொண்டாட்டங்களுக்கும் முக்கியத்துவம் கொடுத்தல்.
- திருவழிபாட்டில் திருப்பலி முக்கியத்துவம் பெறுதல்.
- புனிதர் வணக்கம், திருப்பயணங்கள் முக்கியத்துவம் பெறுதல்.
- இந்தியாவின் அனைத்து இடங்களிலும் இலத்தீன் திருச்சபை காணப்படுகிறது.

**ii. மார்தோமா திருச்சபையின் தோற்றம் பற்றிய விடயங்கள் நான்கு தருக.**

- மார்தோமா திருச்சபையானது புரட்டஸ்தாந்து சீர்திருத்தத்தைத் தொடர்ந்து இந்தியாவிற்கு வந்தது. 1806ஆம் ஆண்டு பிரித்தானிய ஆளுநர் ஓர் அங்கிலிக்கன் குருவை இந்தியாவிலுள்ள பழமை வாய்ந்த தோமையாரின் ஆலயம் பற்றி ஆய்வு செய்ய அனுப்பினார்.
- கேரளம் வந்த அங்கிலிக்கன் மறைபரப்பாளருக்கும் தோமையார் கிறிஸ்தவர்களுக்கும் இடையில் நல்லுறவு ஏற்பட்டது.
- அங்கிலிக்கன் மறைபரப்பாளர் தங்கள் புரட்டஸ்தாந்து பேதகங்களைக் குருமட மாணவர்கள்மேல் திணிக்கத் தொடங்கவே மலங்கரா திருச்சபையினர் அங்கிலிக்கன் சபையுடனான தங்கள் உறவை முறித்துக் கொண்டனர்.
- ஒரு சிறிய பிரிவினர் தங்கள் சபையைவிட்டு விலகி அங்கிலிக்கன் சபையுடன் முற்று முழுதாக இணைந்தனர்.
- இன்னொரு பெரிய பிரிவினர் தங்களுக்கு எத்தகைய சீரமைப்பும் வேண்டாமெனக்கூறி மலங்கரா வைதீக திருச்சபையில் தொடர்ந்து இருந்தனர்.
- மற்றொரு பிரிவினர் தங்கள் சபையின் வழிபாட்டிலும், வாழ்க்கையிலும் பெரிய சீரமைப்புக்களைப் புகுத்தத் தொடங்கினர்.
- இவஉகள் 1836இல் மலங்கரா திருச்சபையிலிருந்து வெளியேறி ‘மாஉ தோமா திருச்சபை’ என்ற சபை தோற்றம் பெற்றது.

iii. **ஜப்பானில் திருச்சபை ஆரம்பத்தின்போது இயேசு சபையினர் ஆற்றிய பங்களிப்புக்கள் நான்கு எழுதுக.**

- ஜப்பானில் முதன்முதலில் கிறிஸ்தவத்தைப் போதிக்கவந்த மறைபரப்பாளஉகள் இயேசு சபையினர் ஆவார் (தூய பிரான்சிஸ் சவேரியார், கொஸ்மே தெ ரொறொஸ், ஜோன் பேர்னான்டஸ்).
- அவர்கள் நாகசாக்கிநகரத்தைதமது பணித்தளத்தின்மையமாகக்கொண்டுபெரும்எண்ணிக்கையிலான மக்களைத் திருச்சபையில் இணைத்தனர்.
- 1587இல் கிறிஸ்தவர்களுக்கு எதிரான வேதகலாபனைக் காலத்தில் இச்சபையினர் துன்பங்கள் மத்தியிலும் பணிபுரிந்தனர்.
- 1871இல் மதச்சுதந்திரம் அறிமுகம் செய்யப்பட்ட பின்னர் கிறிஸ்தவ ஆலயங்கள் நிறுவப்பட்டு மறைபரப்பாளர்கள் நியமிக்கப்பட்டனர்.
- கல்வித்துறைக்கு பெரும் பங்காற்றினர்.
  உயர்ந்த கல்வித் திட்டத்தை தயாரித்து அறிமுகம் செய்தனர்.
  தொழில்நுட்பம் தொடர்பான கல்வியினை அளித்தனர்.
  இவர்களால் உருவாக்கப்பட்ட பாடசாலைகள் பிரசித்திபெற்ற உயர்தரப் பாடசாலைகளாக, உயர்ந்த பல்கலைக்கழகங்களாக வளர்ந்தன.

iv. **போர்த்துக்கேயரின் வருகைக்கு முன்னரே இலங்கையில் கிறிஸ்தவம் காணப்பட்டதற்கான நான்கு சான்றுகளை முன்வைக்குக.**

- இவ்வஹாப் அபுசாயிப், பென்சமின் ரபாய் போன்ற வெளிநாட்டு எழுத்தாளர்கள் அனுராதபுரக் காலத்தில் இலங்கையில் யூதேயக் கிறிஸ்தவர்கள் இருந்தார்கள் என்பதற்கு சான்று பகர்கின்றனர்.
- கொஸ்மஸ் இன்டிக்கோ பிளாஸ்தர் எழுதிய ‘கிறிஸ்தவ சபைகளின் விவரணம்’ என்ற நூலில் இலங்கையில் பாரசீகக் கிறிஸ்தவர்கள் இருந்தார்கள் என்பதற்கான சான்று காணப்படுகிறது.
- மகாவம்சம் என்ற நூலில் சிங்கள அரசர்களின் படையில் மைகார என்ற இந்தியக் கிறிஸ்தவ படைத்தளபதி கடமையாற்றிய குறிப்பு உள்ளது.
- 1912இல் இடம்பெற்ற தொல்பொருள் அகழ்வாராய்ச்சியின்போது கண்டெடுக்கப்பட்ட அனுராதபுரக் காலத்தைச் சேர்ந்த கட்டடச் சிதைவுகளும், நொஸ்தோரிய சிலுவையும்.
- 1972இல் பேராசிரியர் செனரத் பரணவிதான என்பவரின் ஆய்வின்படி காசியப்பர், மொகல்லான என்ற அரசர்களின் காலத்தில் கிறிஸ்தவ படைவீரர்கள் இலங்கையில் இருந்திருக்கின்றனர் எனக் கூறப்பட்டுள்ளமை.
- கி.பி. 9ஆம் நூற்றாண்டில் சிகிரியா கால அரசசபையில் நான்கு கிறிஸ்தவ அமைச்சர்கள் இருந்தமை குறிப்பிடப்பட்டுள்ளமை.
- வவுனியா தொல்பொருள் நிலையத்தில் கல்லினால் ஆக்கப்பட்டிருக்கும் திருமுழுக்குப் பாத்திரம் உள்ளமை.

**V. இலங்கையின் கல்வி முன்னேற்றத்துக்காக ஆயர் பொஞ்சின் ஆற்றிய பணிகள் நான்கு தருக.**

- ஆயர் பெற்றக்கினியின் மறைவைத் தொடர்ந்து யாழ்ப்பாணத்தின் ஆயராக நியமிக்கப்பட்ட ஆயர் பொஞ்சின் அவர்கள் ஆயர் செமேரியாவின் மிசனரிக் குழுவில் அங்கத்தவராக செயற்பட்டவர்.
- பாடசாலைகள், அநாதை விடுதிகள், சுதேச துறவற சபைகளை உருவாக்குதல், புதிய மிசனறிமார்களுக்கான தமிழ் மொழியினைக் கற்பித்தல், திருப்பாலத்துவ சபையின் இயக்குனராக செயற்படுதல், விசுவாசப் பரப்புதல் சபையின் இயக்குனராகவும், கத்தோலிக்க திருமணத்தைப் பாதுகாப்பதற்கான ஆக்கங்களை வரைதல் மற்றும் கத்தோலிக்கரின் உரிமை போன்ற கட்டுரைகளை எழுதுதல் போன்ற பணிகளில் ஆயர் செமேரியாவின் உடனுழைப்பாளராக இருந்து பணியாற்றினார்.
- 1868இல் ஆயராகத் திருநிலைப்படுத்தப்பட்டு கல்வி, அச்சுப்பணி, ஆலயங்களைக் கட்டுதல் போன்ற பணிகளை ஆற்றினார்.
- 1869இல் முதலாம் வத்திக்கான் சங்கத்தில் கலந்து கொண்டார்.
- 1871இல் யாழ்ப்பாணத்தில் ஒரு குருமடத்தை உருவாக்கினார்.
- 1876இல் யாழ்ப்பாணத்தில் ‘பாதுகாவலன்’ என்ற பத்திரிகையை ஆரம்பித்தார்.
- 58 சுற்றுநிருபங்களை எழுதியுள்ளார்.
- கொழும்பிலே ஆயராக நியமனம் பெற்றுப் பணியாற்றினார்.
- புனித பேனாட் குருமடத்தையும், ஆசிரியர் பயிற்சிக் கலாசாலையையும் தோற்றுவித்தார்.
- மக்கோனாவில் தொழில்பயிற்சிப் பாடசாலையை உருவாக்கினார்.
- இலங்கையில் கல்விபற்றி ஆராய்ந்து எழுதிய கட்டுரைகளின் பயனாக சுதேச மொழிப் பாடசாலைகளும், அரச நன்கொடை பெறும் மதப் பாடசாலைகளும் ஆரம்பிக்கப்பட்டன.

# கிறிஸ்தவ நாகரிகம்
## பகுதி – II

**04. புனித பவுல் தமஸ்கு நகருக்குச் செல்லும் வழியில் பெற்ற இறையருளின் அனுபவம், அதனடிப்படையில் இறையருள் கிறிஸ்துவின் தியாக மரணம், உயிர்ப்பு என்பவற்றின் பயனாக கிடைத்த மாபெரும் கொடை என்பது பற்றிய புனித பவுலின் கருத்துக்கள், இறையருளால் நிரப்பப்பட்ட கிறிஸ்தவர்கள் உண்மைக்குச் சான்று பகர வேண்டும் என்பவை தொடர்பான மாணவர்களின் அறிவைப் பரீட்சித்தல்.**

**i. தூய பவுலின் திருமடல்களில் காணப்படும் இறையருள் பற்றிய படிப்பினைகளை உள்ளடக்கிய சுருக்கமான கட்டுரையொன்று எழுதுக.**

- புனித பவுல் இறையருளை விளக்க 'காரிஸ்' என்னும் கிரேக்கச் சொல்லைப் பயன்படுத்துகின்றார். இது 'இரக்கம்' அல்லது 'நிலையான அன்பு' எனப் பொருள்படும்.
- இறையருள் பற்றிய படிப்பினைகளை புனித பவுல் உரோமையர் மற்றும் கலாத்தியருக்கு எழுதிய திருமடல்களில் காணலாம்.
- யூதர்கள் சட்டத்தை கடைப்பிடிப்பதன் மூலம் இறையருளைப் பெறமுடியுமென நம்பியிருந்தனர்.
- ஆனால் புனித பவுல் சட்டத்தினாலும் அல்ல, சட்டம் சார்ந்த செயல்களைச் செய்வதாலும் அல்ல, இயேசுகிறிஸ்துவில் நம்பிக்கை கொள்வதன் மூலமே இறையருளைப் பெறமுடியும் என்கிறார்.
- சட்டம் கடவுளிடமிருந்து வருவது. எனவே அது நல்லது, புனிதமானது. எனினும் சட்டம்தான் மனிதனைப் பாவத்திற்கு இட்டுச் செல்கிறது என்கிறார்.
- சட்டம் மீட்பர் வரும்வரையிலும் ஒரு வழித்துணையாகவே வழங்கப்பட்டது. ஆனால் தற்போது மீட்பர் வந்து விட்டதால் சட்டம் அூத்தமற்றதாகி விட்டது.
- சட்டம் கொடுக்கப்படுவதற்கு நானூற்று முப்பது ஆண்டுகளுக்கு முன் வாழந்த ஆபிரகாம் கடவுள்மீது கொண்ட விசுவாசத்தினால் இறைவனுக்கு ஏற்புடையவரானார்.
- சட்டத்தைக் கேள்விப்படாத கலாத்தியர் தூய ஆவியைப் பெற்றுக் கொண்டனஉ. அதற்குக் காரணம் நற்செய்தியைக் கேட்டு கிறிஸ்துவில் விசுவாசம் கொண்டமையே.

**ii. இறையருளால் நிரப்பப்பட்ட கிறிஸ்தவர்கள் எவ்வாறு கடவுளின் படைப்பாகிய சூழலைப் பொறுப்புணர்ச்சியுடன் பாதுகாக்கலாமென விளக்குக.**

- தொடக்கத்தில் கடவுள் மனிதனைப் படைத்தபோதே உலகைப் பாதுகாத்து பராமரிக்கும் பாரிய பொறுப்பை அவனுக்குக் கொடுத்தார்.
- எனவே சூழலைப் பாதுகாக்க மனிதன் கடமைப்பட்டுள்ளான்.
- இயற்கை வளங்களை மனிதன் தன் சுயநலனுக்காக அதிகம் சுரண்டுவதால் பற்றாக்குறை ஏற்படுகின்றது.
- மனித சுரண்டலால் இயற்கையில் ஏற்படுகின்ற சமநிலையற்ற தன்மை காரணமாக மனித இனம் பாரிய அழிவுகளாக சில இடங்களில் வரட்சியையும், சில இடங்களில் வெள்ளப் பெருக்கினால் பெரும் அழிவுகளையும் எதிர்கொள்கின்றது. இது இயற்கையை பொறுப்பற்ற விதமாகப் பயன்படுத்தியதன் விளைவாகும்.

- சூழலை அன்பு செய்த இயேசு தமது போதனைகளின் போது அவற்றைப் பயன்படுத்தி அவற்றின் மேன்மையை எடுத்துரைத்தார்.
- திருத்தந்தை பிரான்சிஸ் 'இறைவனுக்குப் புகழ்' என்கின்ற சுற்றுமடலில் இயற்கைச் சுற்றுச்சூழலை பேணிப் பாதுகாப்பதன் அவசியத்தை வலியுறுத்துகின்றார்.
- நவீன விஞ்ஞான வளர்ச்சிற்குட்பட்ட இன்றைய உலகில் வாழும் மனிதன் தனது சுயநலம், பேராசை காரணமாகத் தினந்தோறும் சூழலை அழிவுக்குள்ளாக்கின்றான்.
- எனவே சூழல் மாசடையச் செய்யும் வழிவகைகளைத் தடுத்து அதனைப் பாதுகாக்கத் தேவையான செயற்பாட்டை மேற்கொள்வது இறையருளால் நிரப்பப்பட்ட கிறிஸ்தவர்களின் பாரிய பொறுப்பாகும்.
- ஒவ்வொரு கிறிஸ்தவனும் தான் வாழும் வீடு, பாடசாலை, சூழல் என்பனவற்றை சுத்தமாக வைத்திருக்க முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

**05. சுரங்கக் கல்லறைகளில் வரையப்பட்ட ஓவியங்களில் இருந்து ஆரம்ப கிறிஸ்தவர்கள் பெற்ற நன்மைகள், கோத்திக் கட்டடக்கலையின் முக்கிய பண்புகள், அரங்க நிகழ்வுகளின் ஊடாக இறையரசின் மதிப்பீடுகள் பரப்புரை செய்யப்பட்ட விதம், பைசாந்தியக் கட்டடக்கலையின் சிறப்பம்சங்கள் தொடர்பான மாணவர்களின் அறிவை மதிப்பீடு செய்தல்.**

**i. கி.பி. 1054 இல் திருச்சபை மேற்கு, கிழக்கு என இரண்டாக பிரிந்தது. இவ்வாறு பிரிந்தமைக்கு வழிகோலிய தலைமைத்துவ, மறைக்கோட்டுக் காரணிகளை விவரிக்கு.**

**தலைமைத்துவம்**

- உரோமைய திருத்தந்தையின் தலைமைத்துவமே முழுத்திருச்சபைக்கும் பொதுவானது என மேற்குத் திருச்சபையினர் கருதினர்.
- அத்துடன் உரோமைய ஆயரும், கொன்தாந்திநோபிளின் பிதாப்பிதாவும் சமமான தலைமைத்துவம் உடையவர்களெனவும் கிழக்குத் திருச்சபையினர் கருதினர்.
- திருத்தந்தை 9ஆம் லியோவின் காலத்தில் கொன்தாந்தின்நோபிள் பிதாப்பிதாவான மைக்கல் செருலாரியஸ் திருப்பலியில் உரோமைத் திருத்தந்தையின் பெயரைச் சொல்லி மன்றாடுவதை நீக்கினார்.
- திருத்தந்தையைப் போன்று தாமும் சரிநிகரானவர் என்று உரிமைகோரி இலத்தீன் முறை மரபுகளையும், ஆலய வழிபாடு அமைப்பையும் மாற்றினார்.

**மறைக்கோட்பாடு**

- கொன்தநாந்திநோபிள் பிதாப்பிதா நிசேயா விசுவாச அறிக்கையில் 'பீலியாகுவே' (Filioque – மகன்) என்னும் சொற்றொடரை சேர்த்துக் கொண்டார்.
- புனித அத்தனாசிரியாரின் நம்பிக்கை அறிக்கையில் தூய ஆவியாரின் இறைத்தன்மை குறித்த மறைக்கோட்பாட்டில் காணப்பட்ட முரண்பாடும் பிளவுக்கு வழி வகுத்தது.
- அதாவது பிதாவினின்றும், சுதனின்றும் தூய ஆவியார் புறப்படுகின்றார் என்கின்ற கருத்தை புனித அத்தனாசியார் முன்வைக்கின்றார்.
- ஆனால் கிழக்குத் திருச்சபையில் பிதாவிடமிருந்து புறப்படும் தூய ஆவியானவர் சுதனூடாக செயற்படுகின்றார் என்கின்ற கோட்பாட்டை முன்வைக்கின்றார்.

- பாடுகள், மரணம், உயிர்ப்பு தொடர்பான பாஸ்கா மறைநிகழ்வுக் கொண்டாட்டம் மேற்குத் திருச்சபையில் ஞாயிறு தினத்தில் அனுசரிக்கப்பட்டு வருவதுடன், உரோமையரின் ஞாயிறு நாளுக்கு முக்கியத்துவம் வழங்கப்படுகின்றது.
- ஆனால் கிழக்குத் திருச்சபையினர் யூதர்களின் ஒய்வுநாள் மரபுப்படி 'சபாத்' இயேசுவின் இறுதி இராவுணவு நடைபெற்ற பெரிய வெள்ளியன்று கொண்டாடப்படுகின்றது.
- இத்தகைய காரணங்களுக்காக திருச்சபை கிழக்கு மேற்காக பிளவுற்றன.

**ii. திருச்சபை, உலகில் இறையரசின் அடையாளமாக விளங்குவதற்கு கிறிஸ்தவ ஒன்றிப்பின் தேவை பற்றி விளக்குக.**

- திருச்சபை உலகில் இறையரசின் அடையாளமாக விளங்குவதற்கு கிறிஸ்தவ ஒன்றிப்பின் தேவை பற்றி விளக்குக.
- இறையரசின் அடையாளமாக விளங்கும் திருச்சபையில் கிறிஸ்துவின் இலட்சியமான ஒன்றிப்பின் தேவை அவசியமாகும்.
- கிறிஸ்து பாடுகள் மரணம் உயிர்ப்பு எனும் பாஸ்கா மறைபொருள் வாயிலாக பிரிந்திருந்த மக்களினங்களை ஒன்றிணைத்தார். அவ்வொற்றுமை திருச்சபையில் நிலைக்க வேண்டுமென்றும் விரும்பினார்.
- ஆயினும் கிறிஸ்து எதிர்பார்த்திருந்த ஒற்றுமை திருச்சபை வரலாற்றில் பல்வேறு உலகக் காரணிகளால் சிதைந்துபோய் பிளவுகளுக்கு வித்திட்டது.
- அப்பிளவுகளின் காரணமாக திருச்சபையில் பேதகங்களும், கிழக்கு – மேற்கு திருச்சபைப் பிரிவினையும், மேற்குத் திருச்சபையில் ஏற்பட்ட பிரிவினைகள் என்று பல பிரிவுகளாக கிறிஸ்துவின் விருப்பத்திற்கு எதிராகச் சென்றன. இத்தகைய பின்னணியில் இன்றைய காலகட்டத்தில் கிறிஸ்துவின் விருப்பமாகிய கிறிஸ்தவ ஒன்றிப்பினை கட்டியெழுப்ப வேண்டியது காலத்தின் கட்டயமாகும்.
- இவை இறையரசின் விழுமியங்களான அன்பு, நீதி, இரக்கம், எளிமை, மன்னிப்பு, பகிர்வு போன்ற பண்புகளால் மிளிர வேண்டியது அவசியமாகும்.
- கிறிஸ்துவின் வாழ்வு, போதனை, பணி யாவும் இத்தகைய பண்புகளின் ஊடாக ஒன்றிப்பை ஏற்படுத்துவதாகவே அமைந்துள்ளன.
- இயேசு பிறந்து வளர்ந்த திருக்குடும்பத்தில் மூவொரு இறைவனின் ஒற்றுமைத் தன்மை வலியுறுத்தப்பட்டது.
- இயேசுவின் போதனைகளில் சிறப்பாக மலைப்பொழிவுப் போதனையில் ஒன்றிப்பின் அவசியம் விளக்கப்பட்டு இறையரசின் சாசனமாக அமைந்துள்ளது (மத். 5:7).
- இயேசுவின் இறுதி வேண்டுதல் அடங்கிய யோவான் 17ஆம் அதிகாரத்திலும் 'எல்லோரும் ஒன்றித்திருக்க வேண்டும்' என்று இயேசுவின் இறுதி விருப்பம் முன்வைக்கப்பட்டுள்ளது.
- 'நானே திராட்சைச் கொடி நீங்கள் அதன் கிளைகள். நீங்கள் என்னில் இணைந்திருக்காவிடில் அதிக பலன்தர முடியாது' என்று ஒன்றிப்பின் தேவையை முன்னிலைப்படுத்தி நிற்கின்றார் (யோவா. 15:1-8).
- என்னுடைய கிடையைச் சேராத வேறு ஆடுகளும் எனக்கு உண்டு அவற்றையும் நான் கூட்டிச் சேர்க்க வேண்டும் என்பதிலும் கிறிஸ்தவ ஒன்றிப்பினை நாடி நிற்கின்றார் (யோவா. 10:16)

- இயேசு உயிஉத்தெழுந்த பின்னர் தம் சீடர்களுக்கு கொடுத்த பணிப்புரையிலும் ‘உலகெங்கும் சென்று படைப்பிற்கெலாம் நற்செய்தியை பறைசாற்றுங்கள்’ என்றும், ‘எல்லா இனத்தாரையும் என் சீடராக்குங்கள்’ என்றும் கூறியதிலிருந்தும் கிறிஸ்தவ ஒன்றிப்பின் தேவை வலியுறுத்தப்படுகின்றது (மத். 28:19).
- எனவே அனைத்துலகிற்கும் பொதுமையாய் இருக்கும் கிறிஸ்துவின் திருச்சபை இறையரசின் அடையாளமாகவிருந்து அனைத்து கிறிஸ்தவ சபைகளையும் இணைத்து கிறிஸ்து விரும்பிய ஒன்றிப்பில் வளரச் செய்ய வேண்டியது அவசியமாகும்.

**06. புரட்டஸ்தாந்து சீர்த்திருத்திற்கு வழிகோலிய காரணிகள், ஜோண் கல்வினின் படிப்பினைகள், திரிதெந்தீன் பொதுசங்கம், புரட்டஸ்தாந்து சீர்த்திருத்தத்திற்குப் பின்னர் ஆரம்பிக்கப்பட்ட துறவற சபைகள் மூலம் திருச்சபைக்கு ஆற்றப்பட்ட பணிகள் பற்றிய மாணவர்களின் அறிவை மதிப்பீடு செய்தல்.**

**i. கதீற்றல் பாடசாலைக் கல்வி, ஐரோப்பிய சமூகத்திற்கு வழங்கிய முற்போக்கான பங்களிப்புக்களை மதிப்பிடுக.**

- 8ஆம் நூற்றாண்டில் மன்னன் சார்லிமேனின் கட்டளைப்படி ஒவ்வொரு மறைமாவட்டங்களிலும் கதீற்றல் பாடசாலைகள் ஏற்படுத்தப்பட்டன.
- மறைமாவட்டத்தில் பங்குப்பாடசாலைகள் பலவும் ஒரு கதீற்றல் பாடசாலையும் உருவாக்கப்பட்டன.
- பங்குப் பாடசாலைகளில் ஆரம்பக் கல்வியை பெற்றவர்களுக்கு இங்கு உயர்கல்வி வழங்கப்பட்டது.
- தொடக்கத்தில் பங்குப் பாடசாலைகளில் ஆரம்பக் கல்வியைப் பெற்ற குருமாணவர்களுக்கு உயர்கல்வியை வழங்கும் நோக்குடன் ஆரம்பிக்கப்பட்ட இப்பாடசாலைகளில் பின்னர் ஏழைகளும், செல்வந்தர்களும் பணம் செலுத்தாமல் கல்வியை பெற்றுக் கொண்டனர்.
- இப்பாடசாலைகளுக்கு திருத்தந்தையின் ஆதரவு கிடைத்தது.
- ஆரம்பத்தில் திருச்சபையின் சட்டங்கள், செபங்கள், இறையியல், வாக்கலங்காரம், தத்துவம், இலத்தீன், கிரேக்க இலக்கியங்கள் என்பவை கற்றுக் கொடுக்கப்பட்டன.
- கி.பி. 1100இல் உலக நாடுகளிலும் அரசுகளிலும் ஏற்பட்ட அபிவிருத்தியினால் மேற்குறிப்பிட்ட பாடங்களில் பற்றாக்குறை உணரப்பட்டது. அதனால் அரச சட்டங்கள், மருத்துவம், இலத்தீன் மொழி, இலக்கியம், இலக்கணம், அரசியல், பொருளாதாரம் போன்ற பாடங்களும் உள்வாங்கப்பட்டன.
- கதீற்றல்பாடசாலைகளால்ஐரோப்பியசமூகத்திற்குவழங்கப்பட்டகல்வியால்நாகரிகமடையாதவர்களாகக் கருதப்பட்ட மக்கள் கல்வியைப் பெற்று ஒழுக்கத்திலும், அறிவிலும் சிறந்தோங்குவதற்கு வழிவகுத்தது.
- பின்னர் பல்கலைக்கழகங்கள் ஆரம்பிக்கப்பட்டு மேலும் உயர் கல்வியைப் பெறுவதற்கும், பல துறைகளிலும் மறுமலர்ச்சி ஏற்படுவதற்கும் வழிகோலியது.
- ஐரோப்பாவில் அறிவுத்துறை வளர்ச்சியடைந்தது.
- சுதந்திர சிந்தனைப்போக்கு அதிகரித்து பொதுநிலையினரும் கல்வி கற்கும் வாய்ப்பு ஏற்பட்டது.
- துறைசார்ந்த நிபுணர்கள் உருவாக்கம் பெற்றனர்.

**ii. ஒரு நாட்டின் பல்துறைசார் மேம்பாட்டிற்கு பாடசாலைக் கல்வி பங்களிப்புச் செய்யத்தக்க வழிவகைகள் பற்றி விளக்குக.**

- கல்வியென்பது மனிதனின் பல்துறை சார்ந்த வளர்ச்சிக்கு வழிகோலுகின்றது.
- அதனையுணர்ந்து பாடசாலை கல்விச் செயற்பாடுகளை முன்னெடுக்கின்றபோது ஒரு நாட்டின் பல்துறை சார்ந்த மேம்பாட்டினை அடையமுடியும்.
- இதனைக் கருத்திற்கொண்டு பாடசாலைகளில் சமயம், சமூகம், அரசியல், கலாசாரம், பொருளாதாரம் என பல்வேறு துறைகளில் கற்பிக்கின்றபோது அவற்றின் மூலம் ஒரு நாட்டின் பல்துறை மேம்பாட்டிற்கு உதவமுடியும்.
- எடுத்துக்காட்டாக, சமயக் கல்வியை நோக்கின் ஆன்மீகச் செயற்பாடுகளை முன்னெடுக்கின்றபோது சிறந்த பிரஜைகளை உருவாக்க முடியும்.
- பொருளாதாரத் துறையை நோக்குகின்றபோது விஞ்ஞானம், கணிதம், வணிகம் சம்பந்தமான பாடங்களுடன் சிறந்த தொழில்நுட்பக் கல்வியையும் வழங்குகின்றபோது அதன் மூலமாக நாட்டின் வளர்ச்சிக்கு உதவிட முடியும்.
- இன்று உலகில் அரசியற் செயற்பாடுகள் முரண்பட்டுக் காணப்படுகின்றன. பாடசாலைக் கல்வியில் சிறந்த அரசியல் கல்வியை வழங்குவதன் வாயிலாக நாட்டிற்கு தேவையான நல்ல அரசியல் தலைவர்களை உருவாக்க முடியும்.
- சமூகக் கலாசார விழுமியங்களை கற்றுக்கொடுப்பதன் மூலம் எதிர்காலத்தில் சிறந்த சமூகத்தை உருவாக்கலாம்.

**07. இலங்கையில் கத்தோலிக்க மறையைப் பரப்புவதற்கு போர்த்துக்கேய மிசனரிமார் மேற்கொண்ட நடவடிக்கைகள், அவர்கள் எதிர்கொண்ட சவால்கள், ஒல்லாந்த சீர்த்திருத்த சபையை பிரபல்யம் அடையச் செய்ய பிலிப் பல்தேயுஸ் பாதிரியார் பின்பற்றிய நடைமுறைகள், ஆங்கிலக் கல்வி அறிமுகம் செய்யப்பட்டமையால் இலங்கைச் சமூகம் பெற்றுக்கொண்ட நன்மைகள் பற்றிய மாணவர்களின் அறிவைப் பரீட்சித்தல்.**

**i. இலங்கையில் போர்த்துக்கேயர் ஆட்சிக்காலத்தில் கத்தோலிக்க சமய வளர்ச்சிக்கு ஓவியம், இலக்கியம், கட்டடக்கலை, அரங்கியற்கலை ஆகியவை பயன்படுத்தப்பட்ட விதத்தை ஆராய்க.**

- கலையென்பது மனிதன் தன் உள்ளத்து உணர்வுகள், எண்ணங்கள், சிந்தனைகளை புலன்களால் காணக்கூடிய முறையில் வெளிப்படுத்த எடுக்கும் முயற்சிகளைக் குறிக்கும்.
- இலங்கையில் போர்த்துக்கேயர் காலத்தில் திருவிவிலியக் கருத்துக்களையும், கத்தோலிக்க கொள்கை கோட்பாடுகளையும், புனிதர்களின் வரலாறுகளையும் எடுத்துரைத்து கத்தோலிக்க சமயத்தை பரப்புரை செய்து வளர்ச்சியடையச் செய்வதற்கு பல்வேறு கலைவெளிப்பாட்டு அம்சங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.
- இக்காலத்தில் இயற்றப்பட்ட 'ஞானப்பள்ளு' இலக்கியத்தினூடாக இயேசுகிறிஸ்துவைப் பற்றியும், கிறிஸ்தவம் ஆரம்பமாகி வளர்ச்சியடைந்த இடங்களான எருசலேம், உரோமை ஆகிய இடங்களின் சிறப்புக்கள் பற்றியும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

- ‘சந்தியோகுமாயோர் அம்மானை’ மூலம் புனித பெரிய யாகப்பரின் வாழ்க்கைக் குறிப்புக்கள், இயேசுகிறிஸ்து, மரியாள், திருவிவிலியக் கருத்துக்கள் எனப் பல விடயங்கள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.
- அவ்வாறே, நற்செய்தி நூல்கள், பவுலின் திருமுகங்கள், 26 புனிதர்களின் வரலாறுகள் என்பன சிங்களத்தில் மொழிபெயர்க்கப்பட்டன.
- அரங்கியற்கலையை எடுத்துக்கொண்டால் இயேசுசபைக் குருக்கள் மத்திய காலத்தில் உருவாக்கப்பட்ட மறைஞான நாடகங்கள், அற்புத நாடகங்கள் போன்றவற்றை தாமறிந்த ஸ்பானிய, போர்த்துக்கேய மரபுகளில் மேடையேற்றியுள்ளனர்.
- அத்துடன் மரபு ரீதியான கத்தோலிக்க நாட்டுக்கூத்துக்களும் மன்னார், யாழ்ப்பாணம் போன்ற பகுதிகளில் மேடையேற்றப்பட்டதாகக் கருதப்படுகின்றது.
- நவகமுவ புனித அன்னாள் ஆலயத்தில் கண்டெடுக்கப்பட்ட புனித அன்னாளின் உருவத்திரை போர்த்துக்கேயர் காலத்து ஓவியக்கலைக்கு சிறந்த எடுத்துக் காட்டாகும். இத்திரைச்சீலை இன்று தேவத்தை அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளது.
- போர்த்துக்கேயர் காலத்தில் இங்கு மறைபணியாற்ற வந்த மறைபரப்பாளர்கள் கரையோரப் பகுதிகளில் பணியாற்றி மக்களை மனந்திருப்பியதோடு அவர்களின் வழிபாடுகளுக்காக உரோமைய பசிலிக்கா முறையிலான பல ஆலயங்களைக் கட்டினர்.

ii. **கிறிஸ்தவ மதிப்பீடுகளை முன்னேற்றுவதற்கு ஓவியம், இலக்கியம், கட்டடக்கலை, அரங்கியற் கலை, சமூக வலைத்தளங்கள் போன்றவற்றை நடைமுறைச் சமூகத்தில் பயன்படுத்ததக்க விதத்தை விவரிக்கு.**

- ஓவியம், இலக்கியம், அரங்கியற்கலை, கட்டிடக்கலை என்பனவற்றின் மூலம் கிறிஸ்தவ சமயம் சம்பந்தமான படிப்பினைகளையும், மதிப்பீடுகளையும் இலகுவாக மக்கள்முன் கொண்டு செல்லமுடியும் என்பதற்கு வரலாறு சான்றாகும்.
- மனித உணர்வுகள் இலகுவில் தொடக்கக்கூடிய ஆற்றல் ஓவியங்களுக்கு எப்போதும் உண்டு. 12ஆம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்ட வர்ணக் கண்ணாடிச் சித்திரம், மறுமலர்ச்சிக்காலப் படைப்புக்கள் என்பன இன்றும் மக்களால் விரும்பப்படுகின்ற ஆழ்ந்த இறையியல் நோக்குடைய படைப்புக்களாகத் திகழ்கின்றன.
- இன்று நாடகத்துறையில் பல புதிய நுட்பங்கள் புகுத்தப்பட்டிருப்பதோடு அவை மக்களால் மிகவும் விரும்பப்படுகின்றன. இவற்றில் பொருத்தமான யுக்திகளையும், நுட்பங்களையும் பாஸ்கு நாடகங்களிலும், புனிதர்களின் வரலாறுகள் பற்றிய நாடகங்கள், நாட்டுக்கூத்துக்களிலும் புகுத்துவதன் மூலம் அவற்றை நடைமுறைச் சமூகத்திற்கு ஏற்றவையாக மாற்றலாம்.
- செய்யுள் வடிவில் அமைந்த தமிழ்க் கிறிஸ்தவ இலக்கியங்களை உரைநடை இலக்கியங்களாக மாற்றீடு செய்வதன் மூலம் நடைமுறைச் சமூகத்தில் பயன்படுத்த முடியும்.
- இன்று அதிகமானவர்கள் தமது பொழுதுபோக்கு சாதனமாகவும், அவசியமான பொருளாகவும் சமூக வலைத்தலங்களைப் பயன்படுத்துகின்றனர். கிறிஸ்தவம் சம்பந்தமான விடயப் பொருட்களை குறுந்திரைப்படங்களாக, முழுநீள திரைப்படங்களாக தொலைக்காட்சிகளிலும், இணையங்களிலும் வெளிப்படுத்துவதன் மூலம் நடைமுறைச் சமூகத்தில் பயன்படுத்தலாம்.

- கிறிஸ்தவ கலை இலக்கிய மன்றங்களை அமைத்து அதனூடாக கலைவழி விவிலிய விழுமியக் கல்வியினை வளர்க்க முயற்சிகள் மேற்கொள்ளல்.
- புதிதாக ஆலயக் கட்டடங்களை அமைக்கின்றபோது பண்பாட்டம்சங்களை கருத்திற்கொண்டு அதனை நடைமுறைப்படுத்துவதன் வாயிலாக கட்டடக்கலையினை வளர்க்கலாம்.

**08. இயேசுவின் சீடர்கள் ஒற்றுமையாக இருப்பதன் அவசியம் பற்றிய இயேசுவின் போதனைகள், கிறிஸ்தவ ஒன்றிப்பின் வரலாறு, கிறிஸ்தவ ஒன்றிப்பினை ஏற்படுத்த கத்தோலிக்கத் திருச்சபை வழங்கும் பங்களிப்பு, இலங்கையில் கிறிஸ்தவ ஒன்றிப்பை மேம்படுத்த மாணவர்களால் வழங்கக்கூடிய பங்களிப்பு என்பவைப் பற்றிய மாணவர்களின் அறிவை மதிப்பீடு செய்தல்.**

**i. திருமணம், குடும்பம் ஆகியன பற்றி 2 ஆம் வத்திக்கான் சங்கத்தின் இன்றைய உலகில் திருச்சபை என்னும் ஏட்டில் குறிப்பிட்டுள்ள படிப்பினைகளை விளக்குக.**

- இரண்டாம் வத்திக்கான் சங்கம் வெளியிட்ட பதினாறு ஏடுகளில் 'இன்றைய உலகில் திருச்சபை'யும் ஒன்றாகும். அதில் திருமணம், குடும்ப வாழ்வு பற்றி பல கருத்துக்கள் முன்வைக்கப்பட்டுள்ளன.
- திருச்சங்கம் திருமண, குடும்ப வாழ்வை அடிப்படை மனித உறவாக நோக்கி, அதனை அன்புச்சமூகம் என்று வரையறுக்கின்றது.
- திருமண அன்பினால் உருவாகும் நெருங்கிய உறவுச் சமூகம் குடும்பம். அதனைப் படைப்பின் தொடக்கத்தில் கடவுள் ஏற்படுத்தினார்.
- திருமண அன்பின் ஆள்நிலை சார்ந்ததும், பின்வாங்கக்கூடாத இசைவிலும் உருவானதே குடும்பம்.
- மனித உயிரை வழிவழியாக வழங்கும், காக்கும் உயரிய கடமையைக் கடவுள் திருமணத்தினூடாக குடும்பத்திடம் ஒப்படைத்துள்ளார்.
- இறைத்திட்டத்திற்கேற்ப சமூதாயத்தின் முன்னிலையில் நீடித்துநிற்கும் ஓர் அமைப்பே குடும்பம். குடும்பம்தான் சமூதாயத்தின் அடித்தளமாக உள்ளது.
- குடும்பம் மனித மாண்பினை வளமுறச் செய்யும் பள்ளியாகும்.
- திருமணமானோர் திருமண அன்பில் பிரமாணிக்கமாக வாழ்வதால் இயேசுகிறிஸ்துவின் வாழ்வு, பாடுகள், மரணம், உயிர்ப்பு வழியாக வெளிப்படுத்தப்பட்ட இறையன்பிற்குச் சாட்சியம் பகர்கின்றனர்.

**ii. கிறிஸ்தவ குடும்பங்களில் அதிகரித்து வரும் குழப்பகரமான சூழ்நிலைகளில் மகிழ்ச்சிகரமானதும் ஆரோக்கியமானதுமான குடும்ப வாழ்வினைக் கட்டியெழுப்புவதில் பிள்ளைகளின் வகிபாகம் பற்றி விளக்குக.**

- கடவுள் ஏற்படுத்திய திருமண – குடும்ப வாழ்வு சிறப்படைவதில் பிள்ளைகளுக்கு கணிசமான பங்குண்டு. ஆனால் இன்று பிள்ளைகளின் முரண் நடத்தைகள் காரணமாக குடும்பவாழ்வு சீரழிந்து செல்கின்றது.
- பத்துக்கட்டளைகளில் நான்காம் கட்டளை தாய், தந்தையை மதித்து வாழ வேண்டுமெனக் கூறுகின்றது. இதனைக் கடைப்பிடித்து பெற்றோரை மதித்து வாழும்போது மகிழ்ச்சிகரமான குடும்ப வாழ்வினைக் கட்டியெழுப்பலாம்.
- புனித பவுல் எபேசியருக்கு எழுதிய திருமுகத்தில் பிள்ளைகள் பெற்றோருக்கு கீழ்ப்படிந்து வாழ வேண்டுமென அறிவுரை கூறுகின்றார். இதன்படி பிள்ளைகள் பெற்றோருக்கு கீழ்ப்படிந்து அவர்கள் விருப்பப்படி நடக்கும்பொழுது ஆரோக்கியமான குடும்ப வாழ்வினைக் கட்டியெழுப்பலாம்.